உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

விருத்தாசல புராணத்திலுள்ள

# சசிவன்னன் சரித்திரம்.

இஃது

தேவஸ்தான கோபுராபுரம்,

அண்ணாமலை ஐயா அவர்களால்

ஸ்ரீவேலன் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1930



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## விருத்தாசல புராணத்திலுள்ள

# சசிவன்னன் சரித்திரம்.



## துதி.

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருமிகு மெமது கற்பகக் களிற்றைச் சேந்தனைக் கோடிநா யக
யருணிறை ஞான வாதிநா யகனை யம்பிகை யாதிநா யகியை [னை
வரமிகு பரனும் நந்திமா முனியை மாசறு சசிவன்னன் றன்னைத்
தெருண்மிகு ஞான சிற்பரஞ் ஜோதித் தேசிகன் றனைப்பணிந்
[திடுவாம.

## சரிதம்.

நாரணன் றன்னை நோக்கி நம்பர்தா யருளிச் செய்வார்
சீரணி தவத்தி னோர்கள் சேவையின் பெருமை கேளீ
ரேணி பாவ வெச்ச னென்றொரு மறையோன் மைந்தன்
றாரணி தன்னிற் பாவி சசிவன்ன னென்பான் மன்னோ .(1)

பத்தரை பரமன் றன்னை பரவுவே தத்தை நீற்றை
மெய்த்தரு மத்தை நிந்தை விளம்புவ தவன்றன் கல்வி
நித்தலுங் களவு செய்த னியமந்தன் னடுத்தார் தம்மைக்
குத்திரஞ் செய்த றானே குலாசார மாவ தம்மா, (2)

மாதரைக் கிளைஞர் தம்மை வாலரைக் கருவைக் கோவை
வேதியர் தம்மைக் கொல்லும் விரதமே விரத நல்ல
நீதிக ளுடையோர் வீட்டி னெருப்பிட்டும் விடங்க ளிட்டும்
பாதகப் பொடிக டூவிப் பறிப்பதே யவன்றன் கேள்வி. (3)

பத்திர மெழுதி யேவற் பணியினர் போலச் சென்று
குத்திரஞ் செய்து கோளுங் குறளையு முரைத்து முன்னை
மித்திரர் போலப் பேசி விருந்துண்டு களவு கொண்டு
சத்துரு வாகப் பேசித் தனிப்பழி தீரா நின்றான். (4)

நிறைத்தபொய் யோலை காட்டி நிலங்களுந் தனமுங் கொண்டு
மறைத்தவ வேடங் கொண்டு வழிக்கரை வந்தி யிட்டுப்
பறைச்சியை மனைவி யாக்கிப் பாதக ரிணக்கஞ் செய்து
மிறைச்சியு மீனுங் கள்ளு மீயலு மருந்தா நின்றான். (5)

சுரர்களா யிவன்றன் வர்க்கஞ் சுவர்க்கத்தை யடைந்தோ ரெ
தரமிலா நரகில் வீழ்ந்தார் சசிவன்னன் செய்த பாவ [ல்லாக்
முரண்முய லகனும் பேயு நோயுமாய் மொய்த்து வீழ்ந்தா
னரகமும் வருவ னென்று நடுங்கிடத் தொடங்கிற் றம்மா (6)

வெறுத்திட வொருவன் செய்த பாவங்கண் மிக்க ஞான்று
பொறுக்குமோ தெய்வ மிம்மை தன்னிலே புடைத்துப் பின்
மறுத்திட நரகில் வாட்டும் புண்ணிய மலிந்த ஞான்று [னர்
நிறுத்துமோ விம்மை காட்டு நெருப்புநீர் மிகுதி போல (7)

சசிவன்னன் றந்தை யாருந் தரையிடைப் பணிந்து போற்றி
யிசையுள தேவ பத்த ரென்னுமா தவரை நோக்கி
விசையுள மைந்தன் செய்த வினையெலாம் விளக்கச் சொன்ன
கசிவுள தேவ பத்தர் கருணையா லுபதேசித்தார். [ர் (8)

அழுங்கிய பாவ வெச்ச வருண்முது குன்றன் முத்தி
வழங்குவான் வைத்த நந்தி வரையுநாற் காத வெல்லை
செழுந்திரு மலையாள் பூசை செய்தசத் தீச்சு ரத்துக்
கொழுந்துபட் டயனூர் பூசை கொடுத்தபின் சிருட்டி பெற்றார்

பூருவ மகவான் பூசை புரிந்துவா னரச னான
னேருறு மிந்தி ராணி பூசையா லவனைச் சேர்ந்தாள்
தாருகா சுரன்பூ சித்துத் தானவர்க் கரச னான
னுருறு வெள்ளிபூசித் தவர்புரோ கிதரு மானார். (10)

உருவசி பூசை யாலே யுயர்பக வானைச் சேர்ந்தா
ணிருமல நந்தி வெற்பி னீயுநின் மகனும் போகித்
தருமதா னங்கள் செய்து சத்திநா தனையும் போற்றிப்
பருவரை தனின்மா நந்தி பராயண ரிருப்பார் கேண்மோ 11

அந்தமா யோகி தன்னை யானுத சேவை பண்ணின்
மைந்தனோ யகலு மென்பார் மறைமுனி வாக்கை நம்பி
யிந்தமால் வரையி னண்ணி யீசான கெங்கை யாடித்
தந்தையு மகனுஞ் சத்தித் தலைவனைப் பணிந்து போற்றி.(12

பரமதே சிகரா நந்தி பராயணர் தம்மைப் போற்றி
யுரமுறப் பணிந்து சேவை யுற்றபின் மைந்தன் செய்த
கரவுடைப் பவங்கள் சொன்னான் கடைக்கணால் யோகி நோக்க
விரவுபா தகங்க ளெல்லா மேவிடா தகன்ற வன்றே. (13)

யோகிதன் பூசைக் கேற்ற வுபகர ணங்கள் செய்தும்
போகமார் பசுக்கண் மேய்த்தும் பொற்பதம் பிடித்து நிற்ப
வேகிய பவங்க ணீங்கி வியாதியு நோயும் பேயு
மேகிய துடனே பின்னர்ப் பரிகலச் சேட மீந்தார். (14)

பரிகலச் சேடங் கொண்டு பதத்தினிற் பூசை செய்தா
னரியநீ றியோகி சாத்தி யடியிணை தலைமேல் வைத்துத்
தெரிவுற வுபதே சித்தார் திவ்விய ஞானம் பெற்றுத்
தரிவுள முத்தி பெற்றான் றந்தையு முத்தி பெற்றான். (15)

பிதிர்க்களு நரகம் விட்டுப் பெருஞ்சிவ லோகஞ் சேர்ந்தார்
கதிர்ச்சசி வன்னன் காதற் புலைச்சியுங் கதியிற் சேர்ந்தாள்
மதித்திரு மாலே கேளீர் மாதவர் பெருமை தன்னைத்
துதிக்கரி தின்னஞ் சொல்வோஞ் சுவகையென் றொருத்தி [வேசி (16)

முற்றுப்பெற்றது.

நாவலந் தீவின் முதுகிரி புடையி னாதனா ராதிசத் தீச
காவல னடியார் கருதிய தளிக்கக் காத்திருக் கின்றன னதனால்
ஏவலி னேலை வருவதன் முன்னே யிமகிரி நினைந்திரு தயத்தி
னாவலி னெழுந்து கோலி [illegible] யவரவ ருன்னிய தடை
[மின்

